ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபை(லிமிடெட்)

## இச்சபையில் தமிழ்லிபியில் அச்சிட்ட க்ரந்தங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாநம், ப்ரதிபத தாத்பர்ய ஸஹிதம் | | 1 | 10 | 6 |
| பாரதாதி தனிஸ்லோகம் | ,, ,, | 0 | 3 | 0 |
| ராமசரமஸ்லோகம் | ,, ,, | 0 | 1 | 0 |
| அஷ்டச்லோக டிப்பணி | ,, ,, | 0 | 2 | 0 |
| யதிதர்மஸமுச்சயம் | ,, ,, | 0 | 9 | 0 |
| முதல்திருவந்தாதி | ,, அரும்பதப்ரதிபத ஸஹிதம் | 0 | 9 | 6 |
| இரண்டாம் திருவந்தாதி | ,, ,, | 0 | 6 | 6 |
| மூன்றாம் திருவந்தாதி | ,, ,, | 0 | 6 | 0 |
| நான்முகன் திருவந்தாதி | ,, ,, | 0 | 7 | 0 |
| திருவிருத்தம் | அரும்பதப்ரதிபத தாத்பர்யஸஹிதம் | 1 | 14 | 0 |
| திருவாசிரியம் | ,, ,, | 0 | 3 | 0 |
| பெரியதிருவந்தாதி | ,, ,, ப்ரதிபதஸஹிதம் | 0 | 7 | 0 |
| திருவெழுகூற்றிருக்கை | ,, | 0 | 3 | 0 |
| சிறியதிருமடல் | ,, ,, | 0 | 5 | 0 |
| பெரிய திருமடல் | ,, ,, | 0 | 5 | 0 |
| திருக்குறுந்தாண்டகம் | ,, ,, | 0 | 3 | 0 |
| திருநெடுந்தாண்டகம் | ,, ,, | 1 | 0 | 0 |
| திருப்பல்லாண்டு | ,, ,, | 0 | 8 | 0 |
| இராமாநுச நூற்றந்தாதி உரையுடன் | ,, | 0 | 8 | 0 |
| ...விசிஷ்ட பரமதர்ம சாஸ்த்ரம் தாத்பர்ய ஸஹிதம் | | 0 | 7 | 0 |
| ...தர்மஸிந்தி | | 0 | 1 | 0 |
| ...திருமொழி க-முதல் கக பத்துக்கள் | | 8 | 0 | 0 |
| ...ழ்வார் திருமொழி ஸவ்யாக்யாநம் | | 5 | 6 | 6 |
| ...ச்சந்த விருத்தம் வ்யாக்யாநம் | | 1 | 6 | 0 |
| ...ருமாலை ஸவ்யாக்யாநம் | | 0 | 14 | 0 |
| ...ருப்பள்ளியெழுச்சி | | 0 | 3 | 0 |
| ...மலனாதிபிரான் | | 0 | 7 | 6 |

இப்படிக்கு

ரா. திருவேங்கடத்தானய்யா,

கார்யதர்சி, தனாதிகாரி.

நெ. 31, வெங்கிடாசலமுதலி வீதி, சென்னை.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:









மயர்வறமதிநல மருளப்பெற்ற திருப்பாணாழ்வார் அருளிச்செய்த

# அமலனாதிபிரான்



## தனியன்.

பெரியநம்பிகள் அருளிச்செய்தது.

𑌆𑌪𑌾𑌦𑌚𑍂𑌡𑌮𑌨𑍁𑌭𑍂𑌯 𑌹𑌰𑌿𑌂 𑌶𑌯𑌾𑌨𑌂
𑌮𑌧𑍍𑌯𑍇 𑌕𑌵𑍇𑌰𑌦𑍁𑌹𑌿𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾 ।
𑌅𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃𑌤𑌾𑌂 𑌨𑌯𑌨𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌣𑌾𑌂
𑌯𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌕𑌾𑌯 𑌮𑌨𑌵𑍈 𑌮𑍁𑌨𑌿𑌵𑌾𑌹𑌨𑌂 𑌤𑌂 ॥

ஆபாதசூடமநுபூய ஹரிம் ஶயாநம்
மத்யேகவேரதுஹிதுர்முதிதாந்தராத்மா
அத்ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணாம்
யோநிஶ்சிகாய மநவைமுநிவாஹநம்த

பதவுரை,

ய:—யாவரொரு திருப்பாணாழ்வார், கவேரதுஹிது:—திருக்காவேரியின், மத்யே—நடுவில், ஶயாநம்—திருக்கண்வளர்ந்தருளுகிற, ஹரிம்—அழகியமணவாளப் பெருமாளை, ஆபாதசூடம்—திருவடிதொடங்கி திருமுடியளவாக, அநுபூய—அநுபவித்து, நயநயோ:—தம் திருக்கண்களுக்கு, விஷயாந்தராணாம்—பகவத்விஷயம் தவிர்ந்த மற்றவிஷயங்களைக்காண்பெறுமையை, நிஶ்சிகாய—அறுதியிட்டருளினாரோ, தம்—அப்படிப்பட்டவராய், முநிவாஹநம்—லோகஸாரங்க முனிவை வாஹநமாக வுடையரான திருப்பாணாழ்வாரை, மநவை—த்யாநம் பண்ணக்கடவேன்.

யாவதேஷ்யாயுஷோஷிதோ ஸ்விமரஜஹ்ஷ || ஶ்ருத்வா வாகீஸ வாஸ
வ்யாஸ ஸம்வேவ நாடு வாஸ ஶோபிதாஞ்ஜஹ்ஷ | ஸவை
நூ ... நாஹஜ்ஜை மெகாஜைம் ஈயாநஹஹவியஜ்ஞவாஸத்ருகஹ்ஷ ||
ஹ ... ஜாவயாநம் ப்ரஸூதாந்ஹவம் நிகூனநிதாநிக
வாசயம்ஹ்ஷ | ஸந்த்ரஸவம்ஸசமரவெஷம் ஸஜஜ்ஜதலம்
வபாஷம்சகா கிரீடகேயூரஹாரகுண்டலம் ப்ரலம்பமுக்தா
மணி ஹேமபூஷிதம் - விஶாலவக்ஷஸ்தல ஶோபிகௌஸ்துபம்|
ஸ்ரீயாச தேவ்யா ப்யுஷிதோருஸக்ரஹம் || ப்ரதப்தசாமீகரசாருவா
ஸஸம்| ஸமேகலாநூபுர ஶோபிதாங்க்ரிகம் | ஸபங்கஜாத
ம்ருணாள கோமளம் ததாநமச்சச்சவியஜ்ஞஸூத்ரகம்|| புஜோபதா
நம்ப்ரஸருதாங்யஹஸ்தம் நிகுஞ்சிதோத்தாநித பாதயுக்மம்-ஸுதீர்
க்கமூர்வம்ஸமுதக்ரவேஷம் புஜங்கதல்பம் புருஷம் ததர்ஶ” என்று
ப்ரஹ்மாவானவன் அபிமாநியாகையாலே, முடியே தொடங்கியநு
பவித்தான்; இவர் அடியாராகையாலே அடியேதொடங்கி அநுப
வித்தார். அவன்கண்டவநந்தரம் விஷயங்களையும் கண்டான்;
இவர்விஷயங்களைக் கண்டிலர். “திருக்கமலபாதம் வந்தென் கண்ணி
னுள்ளன” “கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே” என்றார்.

வீணையும் கையுமாய் ஸேவிக்கிற இவர்க்கு * சேமமுடை
நாரதனாரும் ஒருவகைக்கு ஒப்பாகார்.

பெரியாழ்வார் அவதாரத்தி லநுபவம் இவர்க்கு அர்ச்சாவ
தாரத்திலே; அவர் * “பாதக்கமலம்” என்றத்தை ‘திருக்கமல
பாதம்’ என்றார்; * “பீதகச்சிற்றுடையொடும்” என்றதை
அரைச்சிவந்த வாடையின்மேல்” என்றும் * அழகியவுந்தியை *
யனைப்படைத்ததோரெழிலுந்தியென்றும் * பழந்தாம்பாலார்
தவுதரத்தை * திருவயிற்றுதரபந்தமென்றும்; * குருமாமணிப்
பூண் குலாவித்திகழும் திருமார்வை * திருவாரமார்வென்றும்;
முண்டமும் நாடுமடங்க விழுங்கிய கண்டத்தை * முற்றுமுண்ட
கண்டமென்றும்; * நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய கைத்த
லத்தை * கையினார் சுரிசங்கனலாழியரென்றும்;* செந்தொண்டை
வாயை * செய்யவாயென்றும; கண்களிருந்தவாவென்றதை* அப்
பெரியவாய கண்களென்றும், * உருவுகரிய வொளிமணி வண்ண
னென்றதை * எழில் நீலமேனியென்றும் * குழல்களிருந்தவா
வென்றதை - * துளவவிரையார் கமழ்நீண்முடியென்று மருளிச்

செய்தார், * கோவலனாய் வெண்ணெயுண்ட வாயனிறே பெரிய பெருமாள். ஆகையால் அநுபவத்தில் இருவரும் ஸமோதாரிகளாயாய்த்திருப்பது. இப்படி மநப்ரீதி பிறக்கும்படி அநுபவித்த ஆழ்வாரை இங்கு மநப்ரீதி பிறக்கும்படி "ஜநமேவ - மநஸா" என்று-மநஸ்ஸாலே ஸேவிக்கும்படி சொல்லிற்று. (க)

---

திருமலைநம்பி அருளிச்செய்தது.

மூ.—காட்டவேகண்டபாத கமலநல்லாடையுந்தி
தேட்டருமுதரபந்தந் திருமார்வுகண்டஞ்செவ்வாய்
வாட்டமில்கண்கள்மேனி முனியேறித்தனிபுகுந்து
பாட்டினால்கண்டுவாழும் பாணர்தாள் பரவினோமே.

---

ப-ரை.—காட்டவே-காண்பித்தபடியே, கண்ட-ஸேவித்த, கமலபாதம்-திருவடித்தாமரைகளும், நல் ஆடை - விலக்ஷணமான திருப்பீதாம்பரமும், உந்தி-திருநாபியும், தேட்டரும்-கிடைத்தற்கரிய, உதரபந்தம்—பொன் அரைநாணும், திருமார்வு—*அலர்மேல் மங்கையுறைமார்பும், கண்டம்-திருக்கழுத்தும், செம்வாய்-சிவந்தவாயும், வாட்டம் இல்-சோர்விலாத, கண்கள்-திருக்கண்களும், (இவற்றோடு கூடிய) மேனி-திவ்யமங்கள விக்ரஹத்தை, முனிஏறி—லோகஸாரங்க மஹாமுநியின் திருத்தோளின் மேலேறி, தனிபுகுந்து — தனியே உள்ளே ப்ரவேசித்து, கண்டு-ப்ரத்யக்ஷித்து, பாட்டினால்-அநுபவ பரீவாஹரூபமான கானங்களாலே, வாழும்-ஆநந்தநிர்ப்பரராயிருக்கிற, பாணர்-திருப்பாணாழ்வாருடைய, தாள்-திருவடிகளை, பரவினோம்—அணுகப்பெற்றோம்.

அ.—(காட்டவேகண்ட பாதகமலம்) பெரியபெருமாளைப் பாதாதிகேஶாந்தமா யநுபவிக்கப்பெற்ற பாண்பெருமாளை ஸ்தோத்ரம் பண்ணி ஹர்ஷிக்கும்படி சொல்லுகிறது.

வ்யா.—(காட்டவேகண்ட பாதகமலம்) "அரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றவே" என்று "ஶ்ரீரங்கேஶயபாதபங்கஜயுகம் - ஸ்ரீரங்கேஶயபாதபங்கஜயுகம்" என்ற - * ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜங்களைச் சொல்லுகிறது. (நல்லாடை) "அரங்கத்தம்மான் அரைச்சிவந்தவாடை" என்

அரங்கநாதனுடைய பீதாம்பரத்தைச் சொல்லுகிறது. (உந்தி) “அரங்கத்தரவினணையான் - அயனைப் படைத்ததோ ரெழிலுந்தி” என்று-விஸ்வ(ஸ்ரு)ஷ்டிநிதாநமான நாபீபத்மத்தைச் சொல்லுகிறது.

(சேட்டருமுதரபந்தம்) * சேட்டரும் திறல்தேனை தென்னரங்கனுடைய சேடற்கரிய வுதரபந்தம். ‘அரங்கத்தம்மான் திருவயிற்றுதரபந்தம்’’ என்று -(க) ‘வடீஸௌவர்ணவேஷ்டநபட்டம் கிலோதரபந்தநம்’’ என்றத்தைச்சொல்லுகிறது. (திருமார்வு) ‘‘அரங்கத்தம்மான் திருவாரமார்பு’’ என்று-லக்ஷ்மீலளித க்ருஹமான வக்ஷஸ்ஸ்தலத்தைச் சொல்லுகிறது. (கண்டம்) ‘‘அரங்க நகர்மேயவப்பன் முற்றுமுண்ட கண்டம்’’ என்று ஸ்ரீரங்கநேதாவின் கண்டத்தைச் சொல்லுகிறது. (செவ்வாய்) ‘‘அணியரங்கனார் - செய்யவாய்’’ என்று (உ) ‘‘ஸுபாஸ்யபாதோஜ - அதர மதுராம்போஜம்’’ என்று - அருணாதரபல்லவத்தைச் சொல்லுகிறது. (வாட்டமில்கண்கள்) * கூழ்ஜ்ஜ்வலமாய் அழலாளியையுடைய தாமரைப்பூவில் வ்யாவ்ருத்தமாய், * ஸதைகரூபமாய, ‘அரங்கத்தமலன் முகத்துக் கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்பெரியவாய கண்கள்’’ என்று * விஸாலஸ்நிக்தாய த்ருஸிரஸிஸிராதாம்ர தவளமான ஸ்ரீரங்கப்ரணயி நயநாப்ஜங்களைச் சொல்லுகிறது. (பேணி) ஏவம்விதமான திவ்யமங்கள விக்ரஹத்தை.

(பணிந்தேறி) முநிவாஹநராய். (தனிபுகுந்து) இந்தமஹாபோக(ஸோம)த்திலே தாம் ஏகராய் உள்புகுந்து (பாட்டினால்) அநுபவத்துக்குப் பாசுரமிட்டுப்பேசின ‘‘அமலனாதிபிரான்’’ என்கிற ப்ரபந்தத்தின்பாட்டுக்களாலே. * அண்டர்கோனணியரங்கனைக் கண்டு வாழுமவராய்த்து இவர். பின்பு இவ்வநுபவத்துக்குபட்டர் தேபரிகரானார். (கண்டுவாழும்) காட்சியே வாழ்ச்சியாக வாழுகிற. பாணர்தாள்—ஸ்ரீபாணியாய்; பெரியபெருமாள் திருவடிக்கீழே நிரந்தர சேவைபண்ணிக்கொண்டு நிற்கிறதிருப்பாணாழ்வார் திருவடிகளை (பரவினோம்) ஸ்தோத்ரம் பண்ணினோம். அலப்யலாபமானது லபிக்கவும் பெற்றோம்; இனியொருகுறைகளு மில்லையென்கிறது.



பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த
அமலனாதிபிரான் தனியன் வ்யாக்யாநம் முற்றிற்று.
பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

(க) ர-ஸ்த-க-௧௧௫.  (உ) ர-ஸ்த-௩-௧௦௬.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

## அமலனாதிபிரான் வ்யாக்யாநாவதாரிகை.

ப்ரணவம்போலே அதிஸங்குசிதமாயிருத்தல், வேதமும் வேதோப ப்ரும்ஹணமான மஹாபாரதமும்போலே பரந்து துறப்புக் கூடாயிருத்தல் செய்யாதே பத்துப்பாட்டாய் ஸங்க்ரஹமாய் ஸர்வாதிகாரமுமாயிருக்கும். (க) "𑌵𑍇𑌦𑍋𑌪𑌬𑍃𑌂𑌹𑌣𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌤𑌾𑌵𑌗𑍍𑌰𑌾𑌹𑌯𑌤 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 - வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயதப்ரபு:" என்றும், (க) "𑌵𑍇𑌦𑌾𑌨𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑌾𑌮𑌾𑌸 𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑌪𑌞𑍍𑌚𑌮𑌾𑌨𑍍 - வேதாநத்யாபயாமாஸமஹாபாரத பஞ்சமாந்" என்

---

ஜீயர் திருவடிகளே சரணம்.

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனாருளிச்செய்த

## அமலனாதி பிரான் வ்யாக்யாநாவதாரிகை.

---

வேதம்போலே முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலே மண்டி அர்ச்சையையும் தொட்டுக்கொண்டு போந்தார்கள்; வால்மீகி பகவானைப்போலே ஸ்ரீ குலசேகரப்பெருமாள் ராமாவதாரத்திலே ப்ரவணராய் அர்ச்சாவதாரத்தையு மநுபவித்தார்; ஸ்ரீ பராஶர பகவானையும் ஸ்ரீ வேதவ்யாஸபகவானையும்போலே, நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் ⁕ ஆழ்வார் திருமகளாரும் க்ருஷ்ணாவதாரத்திலேமண்டி அர்ச்சாவதாரத்தை அநுபவித்தார்கள்; திருமழிசைப்பிரான் (உ) "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி, (ங) "இனியறிந்தேனீசற்கும் நான்முகற்குந் தெய்வம்" என்று-தேவதாந்தர பரத்வநிரஸநத்திலே தத்பரராயிருந்தார்;

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

அரும்பதவிளக்கம்.

அமலன் ப்ரவேஶே; ப்ரபந்த வைலக்ஷண்யமருளிச்செய்கிறார் (ப்ரணவமித்யாதி) (துறப்புக்கூடு) பதறும்கூளமுட்கூடடித்தூற்றுப்பொலி. துறப்புக்கூடானபடி யெப்படி யென்ன; அருளிச்செய்கிறார் (வேதோபப்ரும்ஹணேத்

---

(க) ஸங்க்ஷேபே. (உ) நா-திருவ-க. (ங) நா-திருவ-கங.

னும் சொல்லுகிறபடியே - வேதோபப்ருஹணமான மஹாபாரத ராமாயணங்களும், (க) "நாராயணகதாசிதாம் - நாராயணகதாமி மாம்" இத்யாதிகளைச் சொல்லிவைத்து பகவத்கதை யல்லாதவற் றையும் சொல்லிவைத்தது.

திருவாய்மொழியும் (உ) "அமர்சுவையாயிரம்" (ங) 'பாலோ டமுதன்னவாயிரம்" (ச) "உரைகொளின்மொழி" என்றும் * ஏத மில்லாயிரமாயிருந்ததேயாகிலும் அந்யாபதேஸஸ்வாபதேஸமென்ன, ஸாமாநாதிகரண்ய ஸார்ஜ்ஞயகமென்ன, த்ரிமூர்த்திஸாம்ய ததுத்தீர்ண தத்வ விஶேஷமென்ன இவைதொடக்கமான அருமைகளையுடைத்தா யிருக்கும்; திருநெடுந்தாண்டகமும் பரப்பற்று முப்பதுபாட்டா யிருந்ததேயாகிலும் அதுக்கும் அவ்வருமைகளுண்டு; திருமாலை க்கு அவ்வருமைகளில்லையே யாகிலும் தம்முடைய லாபாலாப ரூபமான ப்ரியா ப்ரியங்களை ப்ரதிபாதியாநிற்கும்; திருப்பல்

---

திருமங்கையாழ்வார், (ரு) "தேரார் நிறைகதிரோன் மண்ட லத்தைக் கீண்டுபுக்கு, ஆராவமுதமங்கெய்தி, அதில்நின்றும் வாரா தொழிவதொன்றுண்டே, அதுநிற்க ஏரார் முயல்விட்டுக் காக் கைப்பின்போவதே" என்று - பரத்வத்தைக் காற்கடைக்கொண்டு அர்ச்சாவதாரத்திலே யிழிந்து அதுதன்னிலும் ஓரிடத்திலிரண்டிட த்திலன்றிக்கே, (சு) "நெருநற்கண்டது நீர்மலையின்றுபோய்க் கரு நெல்சூழ் கண்ணமங்கையுள் காண்டும்' என்றிப்படி * தானுகந்த ஊ ரெல்லாம் தன்தாள் பாடிப் பரபரப்பாய்த் திரிந்தார். பெரிய பெருமாளையும் அல்லாத திருப்பதிகளோபாதி (எ) "கண்டியூரரங் கம் மெய்யம் கச்சிபேர் மல்லை" என்று * கோல்தேனுக வநுபவித் தாரித்தனையிறே; அதுதானும், (அ) "என்றசொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட" என்கிறபடியே - பெரியபெருமாளுடைய விபவ தசையிற்பாசுரங்களுபதேஸமாய்க்கொண்டு தந்திருவுள்ளத்திலே ஊற்றிருக்க, (அ) "நின்னடியிணையடைந்தேன்" என்று-திருவடி களையநுபவித்தவளவிறேயுள்ளது;

---

(க) பார- (உ) தி-வாய்-க ங-கக. (ங) தி-வாய்-அ-சு-கக.
(ச) தி-வாய்-சு-ரு-ங. (ரு) சிறியதிருமடல். (சு) தி-மொ-௧௦-க-க.
(எ) திருக்குறு-கரு. (அ) தி மொ-ரு-அ-க.

லாண்டுக்கு இக்குற்றங்களில்லையே யாகிலும் அதுக்குமொரு குற்ற முண்டு; த்ரிவிதாதிகாரிகளுடைய குணதோஷங்களை ப்ரதிபாதிக்கை யாலே; ப்ரணவம்போலே அல்ல, அதிஸங்க்ஷிப்தமாய் துர்ஜ்ஞேயமா யிராதுபோலே (க) "𑌯𑌦𑌿𑌹𑌾𑌸𑍍𑌤𑌿 𑌤𑌦𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌯𑌨𑍍𑌨𑍇𑌹𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌤𑌤𑍍𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 -யதிஹாஸ்தி ததந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத்க்வசித்" என்கிறபடியே - ஆயிரத்திலொன்றும் கடலில் குளப்படியும் போலே புறம்பில்லாதவையெல்லாம் இதிலேயுண்டாய்† இதிலில்லாதவொன்றும் புறம்பின்றியேயிருக்கும்.

பரவ்யூஹவிபவங்களை ப்ரதிபாதிக்கையன்றிக்கே அர்ச்சாவதாரரூபேண வந்தவதரித்து* திருவரங்கப்பெருநகருள் தெண்ணீர் பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளும் கருமணியை" க்கோமளத்தைக் கண்டுகொண்டு, மணத்தூணே பற்றி நின்று வாயாரவாழ்த்துகிற ப்ரபந்தமாகையாலே எல்லாப்ரபந்தங்களிலும் இப்ரபந்தத்துக்கு வைலக்ஷண்யமுண்டு. மற்றையாழ்வார்களிற்காட்

---

ஸ்ரீ தொண்டரடிப் பொடியாழ்வார் பெரியபெருமாளையநுபவியாநிற்கச்செய்தே தம்மையுணர்ந்தநுபவிப் பதுபரோபதேசம் பண்ணுவது, ஶபத (உ) பூர்வகமாகப் பெரியபெருமாளுடைய பரத்வஸ்தாபநம் பண்ணுவதாய், அந்யபரராய்ப் போந்தார்; இவர் அங்ஙனன்றியே "𑌪𑍂𑌰𑍍𑌣𑌂-பூர்ணம்" என்று சொல்லுகிற படியே பரத்வாதிகளால் பூர்ணரான பெரியபெருமாளையே யநுபவிக்கிறார்; நம்மாழ்வார் தொடக்கமான ஆழ்வார்களுக்கு பகவதநுபவம் நடவாநிற்கச்செய்தே முன்புள்ள ஜந்மபரம்பரைகளிலுண்டான து:காநுபவஸ்மரணத்தாலும் ஸ்வரூபாநுரூபமான பகவத்போக (ஹோம) த்தினுடைய அலாபத்தாலும் க்லேஶாநுபவம கலசி நடவாநின்றது.

ஜாத்யந்தனுக்குக் கண்ணைக்கொடுத்துக் கடலையிலக்காக்குமாபோலேயும், அர்ஜுநனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸைக் கொடுத்து வைஶ்வரூப்யத்தைக் காட்டி அநுபவிப்பித்தாப்போலேயும், அக்ரூர

---

எல்லாவற்றிலும்பற்ற ஆதிக்யம் எத்தாலேயென்ன, அருளிச்செய்கிறார் (யதி ஹாஸ்தீத்யாதி). வக்த்ருவைலக்ஷண்ய மருளிச் செய்கிறார் (மற்றையாழ்வார்களித்யாதி),

---

(க) பார-    † (பா) இதிலுள்ளவை.

டில் இவர்க்கு நெடுவாசியுண்டு; - "பல்லாண்டு" "போற்றி" என்று பாவிக்கவேண்டிற்று - அவர்களுக்கு; அதுவேண்டாதே ஜந்மஸித்தமாய்த்து இவர்க்கு. (௧)"குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" என்கிறபடியே இவர் தம்மைநாலு வர்ணத்திலும் புறம்பாக நினைத்திருப்பர்; பெரியபெருமாளும் அப்படியே நினைத்திருப்பர்; நித்யஸூரிகள் நாலுவர்ணத்திலு முள்ளாரல்லரே. "ஆழ்வார்கள் இருகரையர்" என்னும்படியிறே ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வாரை காந்த்யம்; அவரிலும் இவர் "பரோபதேசமும் இதரநிரஸந

---

மாலாகாராதிகளுக்கு ஸௌந்தர்ய ஸௌஶீல்யாதிகுணாவிஷ்காரத்தாலே அநுபவிப்பித்தாப்போலேயும், (௨)"[illegible] ஏகைகஸ்மிந் பரமவயவேநந்த ஸௌந்தர்யமக்நம் ஸர்வம்த்ரக்ஷ்யேகதமிதி முதா மாமதாமந்தசக்ஷு:| த்வாம்ஸௌப்ராத்ரவ்யதிகரகரம்ரங்கராஜாங்ககாநாம் தல்லாவண்யம் பரிணமயிதா விஶ்வ பாரீணவ்ருத்தி:" என்கிறபடியே-இவருடைய ஸத்யதையாலே பெரியபெருமாள் அர்ச்சாரூபமாயிருக்கச் செய்தேயும் தம்முடைய ஸௌந்தர்யத்தை ஆவிஷ்கரிக்க அந்த ஸௌந்தர்ய ஸாகரத்தை லாவண்யமாகிற மரக்கலத்தாலே எங்கு மொக்க வநுபவிக்கிறார்.

இன்னம் மற்றையாழ்வார்களிற்காட்டில் இவர்க்கு, வாசி; "பல்லாண்டு" "போற்றி" என்றுபாவிக்கவேண்டிற்றுஅவர்களுக்கு-அது வேண்டாதே இவர்க்கு அது ஜந்மஸித்தமாய்த்து. (௧)"குலங்களாய வீரிரண்டி லொன்றிலும் பிறந்திலேன்" என்கிறபடியே - இவர் தம்மை நாலுவர்ணத்துக்கும் புறம்பாக நினைத்திருப்பர்; பெரியபெருமாளும் அப்படியே நினைத்திருந்தார்; நித்யஸூரிகள் நாலுவர்ணத்திலு முள்ளாரல்லரே. ஆழ்வார்கள் இருகரைய ரென்னும்படியிறே ஸ்ரீ தொண்டரடிப் பொடியாழ்வார் ஐகாந்த்யம்; அவரிலும் இவர் பரோபதேசமும் இதர நிராகரணமும் அநுபவவிரோதி" என்று

---

(௧) திருச்சந்த-௯௰ (௨)

ழும் அநுபவவிரோதி" என்று வெறும் பெரிய பெருமாளையே அடித்தலை செவ்விதாக வநுபவிக்கிறார்.

(க) [ஸ்நேஹோமேபரம: - ஸ்நேஹோமேபரம:] (உ) "என்றனளவன்றால் யானுடையவன்பு". [ராஜ்யம்த்வயி - ராஜ்யம்ஸ்த்வயி] இது தானும் என்றால் வந்ததன்று, * அதுவுமவனதின்னருளே. [நித்யம்ப்ரதிஷ்டித: - நித்யம் ப்ரதிஷ்டித:] இன்றன்றாகில் மற்றொருபோது கொடுபோகிறோமென்ன; அங்ஙன் செய்யுமதன்று, தர்மியைப்பற்றி வருகிறதாகையாலே; (உ) "நின்னலாலிலேன்காண்" என்னுமாபோலே. [பக்திஶ்சநியதா - பக்திஶ்சநியதா] ஸ்நேஹமாவதென், பக்தியாவதென், (பக்தியாவதென்னென்னில்; பெருமாளை யொழியச் செல்லாமை பிறந்து வ்யதிரேகத்தில் முடிந்த சக்ரவர்த்திநிலை-ஸ்நேஹம்; பக்தியாவது-"நில்" என்ன, (ங) "குருஷ்வ - குருஷ்வ" என்னும்படியாய் முறையறிந்துபற்றின இளையபெருமாள் நிலை.

[வீர-வீர] தன்னைத் தோற்பித்ததுறை. உம்முடைய வீரங்கொண்டு புறம்பே வென்றீரென்றுஇங்குவெல்லமுடியாது, தானும்

---

வெறும் பெரியபெருமாளையே அடிக்கும்தலைக்கும் செவ்விதாக வநுபவிக்கிறார்.

(க) [ஸ்நேஹோமேபரம: - ஸ்நேஹோமேபரம:] (உ) "என்றனளவன்றால்யானுடையவன்பு." [ராஜ்யம்த்வயி - ராஜ்யம்ஸ்த்வயி] இது தானும் என்றால் வந்ததன்று; * அதுவுமவனதின்னருளே [நித்யம்ப்ரதிஷ்டித: - நித்யம் ப்ரதிஷ்டித:] இன்றன்றாகில் மற்றொருபோது கொடுபோகிறோமென்ன; அங்ஙன் செய்யுமதன்று, தர்மியைப்பற்றி வருகிறதாகையாலே. (ங) "நின்னலாலிலேன்காண்" என்னுமாபோலே. [பக்திஶ்சநியதா - பக்திஶ்ச நியதா] ஸ்நேஹமாவதேது, பக்தியாவதேதென்னில்; பெருமாளையொழியச் செல்லாமைபிறந்து வ்யதிரேகத்தில் முடிந்த சக்ரவர்த்திநிலை-ஸ்நேஹம்; பக்தியாவது-"நில்" என்ன, (ங): "குருஷ்வ-குருஷ்வ" என்னும்படி முறையறிந்து பற்றின இளையபெருமாள் நிலை. [வீர-வீர] தன்னைத்தோற்பித்த

---

* பெருமாளையொழிய வேறொரு ஸ்தலாந்தரமறியாதது எப்படியிருக்கிறதென்ன, அருளிச் செய்கிறார் (ஸ்நேஹோமேயித்யாதி).

---

(க) உத்தர-ரா- (உ) உ-திருவ ௧௦௦. (ங) தி-வாய்-உ-ங-எ. (ச) ரா-ஆ.

வீர்ஞைகையாலே தோற்பித்த துறையைப்பிடித்துப் பேசுகிறான். [ஸாவொநாநுத்ருமஹதி - பாவோநாந்யத்ரகச்சதி] என்னை மீட்டாராகிலும் என்னுடைய நெஞ்சைமீட்கப்போகாது. 'அநந்த்ரு - அநயத்ர'' என்கிறது- (க) "மற்றாரானுமுண்டென்பார்" என்னுமா போலே கொடுபோக நினைத்ததேசத்தின் பேருங்கூடத்தனக்கு அஸஹ்யமாயிருக்கிறபடி. இப்படி ராமாவதாரமல்லதறியாத திருவடியைப் போலேயாய்த்து இவரும், இவர் தேவாரமான பெரியபெருமாளையல்லது பரவ்யூஹவிபவங்களையறியாதபடியும்.

---

துறை [ஸாவொநாநுத்ருமஹதி-பாவோநாந்யத்ரகச்சதி] (க) "மற்றாரானுமுண்டென்பார்" என்னுமாபோலே கொடுபோக நினைத்த தேசத்தின் பேருங்கூடத் தனக்கு அஸஹ்யமானபடி. இப்படி ராமாவதாரமல்லதறியாத திருவடியைப்போலேயாய்த்து-இவரும், அவர் தேவாரமான பெரியபெருமாளையல்லது பரவ்யூஹ விபவங்களையறியாதபடியும்.

அநுபாவ்யரான பெரியபெருமாள் தம்மைப்பார்த்தாலும், பரத்வம்போலே தேஶவிப்ரக்ருஷ்டமாயிருத்தல், வ்யூஹம்போலே தத்ப்ராயமாயிருத்தல், விபவம்போலே காலவிப்ரக்ருஷ்டமாயிருத்தல், அந்தர்யாமித்வம்போலே அசக்ஷுர் விஷயமாயிருத்தல், அர்ச்சாவதாரங்கள்போலே * தெய்வமல்லால் செல்லவொண்ணாதிருத்தல், அநுவர்த்திக்கும்பேர் * சிலைக்கை வேடரேயாய் பயங்கராராயிருத்தல், பெரிய ஏற்றமேற வேண்டியிருத்தல், வருந்திப் பெருங்கூட்டத்தோடேபோயேறினால் *கானமும்வானரமும் வேடுமேயாய் * மேலைவானவரின்றிக்கே யிருத்தல் செய்கையன்றிக்கே இத்தேசத்திலே இக்காலத்திலே எல்லார் கண்ணுக்கும் விஷயமாய்க்கொண்டு (க) "பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்தநாடுஞ் சித்தர்களுந் தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய் நிற்கின்ற திருவரங்கம்" என்கிறபடியே—எல்லார்க்கும் நின்றநின்ற நிலைகளிலே ஆஶ்ரயிக்கலாம்படி ஸர்வஸுலபருமாய் (உ) "வன்பெருவானகம்" இத்யாதிப்படியே உபயவிபூதியையும் நிர்வஹித்துக் கொ

---

(க) சிறியதிருமடல். (உ) பெரு-தி-க.

ஸ்ரீவைகுண்டம் திருப்பாற்கடல் திருவவதாரஸ்தலம் உகந்தருளின திருப்பதிகளிவையெல்லாம் பெரியபெருமாளையாறுபோலே அவ்வோவிடங்களிலுண்டான ஸௌந்தர்ய குணசேஷ்டிதாதிகளெல்லாம் பெரியபெருமாள் பக்கலிலே காணலாம். பெரியபெருமாளழகும் ஐஶ்வர்யமுமெல்லாம் பரமபதத்திலே முகுளிதமாயிருக்கும்; அவதாரத்தில் ஈரிலைபோரும்; இங்கேவந்தபின்புதழைத்தது. எங்ஙனேயென்னில்;—(க) * பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகுமங்காதும் சோராமேயாள்கின்ற வெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வனாராகையாலே அவ்வோவிடங்களில் ஸங்குசிதமாயிருந்ததிறே.

தன்னையுகந்தாரை யநுபவிக்கையன்றியே, ‘தான்’ என்றால்

---

ண்டுபோருகிற மேன்மையை யுடையராய், இப்படி ஸர்வாதிகருமாய் ஸர்வஶேஷியுமாய் ஸர்வரக்ஷகருமாய் ஸர்வஸமாஶ்ரயணீயருமாய் நிரதிஶயபோக்ய பூதருமாயிருப்பவர். (உ) “ஶிரஸா ஹ்ஸூஜ்ஞாயாவநே நவுரஸீக்ஷ்தி - ஶைக்ஷ்யபுஸ்தாச்சாலாயாம் யாவந்மே நப்ரஸீததி’ என்று ‘ஸ்ரீபரதாழ்வான் என்தலையில் சுமைவாங்கினாலல்லது எழுந்திரேனென்று கிடந்தாப்போலே உங்கள்சுமைகளை என்தலையில்வைத்தாலல்லது எழுந்திரேன், (௩) ‘யோகக்ஷேமம் வஹாம்யஹம்-யோகக்ஷேமம் வஹாம்யஹம்’ என்று கிடக்கிறவரிறே. ஸ்ரீவைகுண்டம், திருப்பாற்கடல், திருவவதாரங்கள், உகந்தருளின திருப்பதிகளெல்லாம் பெரியபெருமாளே யானைப்போலே அவ்வோவிடங்களிலுண்டான ஸௌந்தர்ய குணசேஷ்டிதாதிகளெல்லாம் பெரிய பெருமாள் பக்கலிலே காணலாம்.

பெரியபெருமாளுடைய அழகும் ஐஶ்வர்யமும் பரமபதத்தில் முகுளிதமாயிருக்கும்; அவதாரத்திலே ஈரிலைபெறும்; இங்கே வந்தபின்பு தழைத்தது. எங்ஙனேயென்னில்;* பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வனாரானையாலே அவ்வவ்விடங்களில் ஸங்குசிதமாயிருந்ததிறே; தன்னையுகந்தாரநுபவிக்கையன்றிக்கே “தான்” என்றால் விமுகராயிருப்பாருங்கூட

---

எல்லா ஸ்தலங்களையும் விட்டுப்பெரிய பெருமாளைப்பற்றுகைக்கு ஹேது வேதென்ன, அருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்டமித்யாதி).

---

(க) நா-தி-கூ-ரு. (உ) ரா-அ. (௩) கீ.

விமுகராயிருப்பாரும் கண்டநுபவிக்கலாம்படி யிருக்கையாலே நீர்மையினால்வந்தவேற்றமுமிங்கேயுண்டு; குணாதிக்யத்தாலேயிறேவஸ்துவுக்கு உத்கர்ஷம்; குணம் விலைபெறுவது இங்கேயிறே. குணத்திலகப்பட்டார் இவ்விஷயம்போக்கி அறியார்களிறே.

(க) "யதோ வாசோ நிவர்த்தந்தே-யதோவாசோ நிவர்த்தந்தே" என்று - வேதங்களுக்கெட்டாத ஸர்வேஶ்வரனை, ஆற்றில் தண்ணீரோபாதி ஆற்றுக்குள்ளே கண்டநுபவிக்கலாம்படி யிருக்கிறவிடமிறே. * மழைக்கன்றுவரைமுனேந்தும் மைந்தன்மதுரவாறுன அவ்வாறு இவ்வாறுய்த்துக்காணும். இவர் தமக்கு ப்ராப்யரும்

---

வநுபவிக்கும்படி யிருக்கையாலே நீர்மையாலே வருமேற்றமிங்கே யுண்டு. குணாதிக்யத்தாலேயிறே வஸ்துவுக்கு உத்கர்ஷம்; குணம் விலைபெறுவதிங்கேயிறே. குணத்திலகப்பட்டார் இவ்விஷயம்போக்கி யறியார்களிறே. (க) "யதோ வாசோ நிவர்த்தந்தே-யதோவாசோ நிவர்த்தந்தே" என்று - வேதங்களுக்கு மெட்டாத ஸர்வேஶ்வரனை ஆற்றில் தண்ணீரோபாதி ஆற்றுக்குள்ளே கண்டநுபவிக்கலாம் படி யிருக்கிறவிடமிறே. * மழைக்கன்றுவரைமுனேந்தும், மைந்தனேமதுரவாறுன அவ்வாறு இவ்வாறுய்த்துக்காணும். ஆஶ்ரயணீயராகையாலே மேன்மையும், நீர்மையாலே உபாயபாவத்தையும், வீர்யாதிகளாலே விரோதிநிரஸநத்தையும் ஸௌந்தர்யத்தையும் சொல்லுகையாலே போக்யதையும் சொல்லிற்றாகிறது ப்ராபக ஸ்வரூபம் அநுபவத்திலே மறைந்துபோய்த்து. இப்ப்ரபந்தந்தான் ப்ரணவம்போலே அதிஸங்குசிதமாயிருத்தல், வேதமும் வேதோபப்ரும்ஹணமான மஹாபாரதமும்போலே பரந்து துறுப்புக்கூடாயிருத்தல் செய்யாதே பத்துப்பாட்டாய் ஸங்க்ரஹமுமாய் ஸர்வாதிகாரமுமாய், (உ) "ஸ்ராவ்யஸ்ய-ப்ராப்யஸ்ய" இத்யாதிப்படியே அர்த்தபஞ்சக ப்ரதிபாதகமுமாயிருக்கும்.

---

(அவ்வாறுஇவ்வாறு) என்றது-ரஸோக்தி. க்ருஷ்ணன்தானேவந்து இவ்வாற்றிலே கண்வளர்ந்தானென்றபடி. ப்ரதிபாத்யவைலக்ஷண்யத்தைச் சொல்லாநின்றுகொண்டு ப்ரபந்தத்தினுடைய அவதாரணக்ரமத்தை அருளிச்செய்கிறார் (இவர்தமக்கித்யாதி).

---

(க) தைத்திரி. (உ) ஹாரீதஸ்ம்ருதி.

அ-வ்யா:—

(க) "[illegible] வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயதப்ரபு:" என்றும். (க) "[illegible] - வேதாநத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்சமாந்" என்றும் சொல்லுகிறபடியே - வேதோபப்ரும்ஹணமான மஹாபாரத ஸ்ரீராமாயணங்களும், (உ) "[illegible]-நாராயணகதாமிமாம்" இத்யாதிகளைச் சொல்லிவைத்து பகவத்கதையல்லாதவற்றையும் சொல்லிற்று; திருவாய்மொழியும், (ங) "அமர்சுவையாயிரம்" (ச) "பாலோடமுதன்னவாயிரம்" (ரு) "உரைகொளின்மொழி" என்று *ஏதமிலாயிரமாயிருந்ததேயாகிலும், அந்யாபதேச ஸ்வாபதேசமென்ன, ஸாமாநாதிகரண்ய நிர்ணயமென்ன, த்ரிமூர்த்திஸாம்யதது த்நிர்ணதத்வநிஷேதமென்ன, இவைதொடக்கமான அருமைகளையுடைத்தாயிருக்கும்; திருநெடுந்தாண்டகமும் பரப்பற்று முப்பதுபாட்டாயிருந்ததேயாகிலும் அதுக்கும் அவ்வருமைகளுண்டு; திருமாலைக்கு அவ்வருமைகளில்லையேயாகிலும் தம்முடைய லாபாலாபமான ப்ரியாப்ரியங்களை ப்ரதிபாதியாநிற்கும்.

திருப்பல்லாண்டுக்கு இக்குற்றங்களொன்றுமில்லையேயாகிலும் அதுக்குமொருகுற்றமுண்டு - த்ரிவிதாதிகாரிகளுடைய குணதோஷங்களை ப்ரதிபாதிக்கையாலே. இதுப்ரணவம்போலுமல்ல, அதிஸங்குசிதமாய் துர்ஜ்ஞேயமாயிராமையாலே. (சு) "[illegible] - யதிஹாஸ்திததந்யத்ர யந்நேஹாஸ்திநதத்க்வசித்" என்கிறபடியே, ஆயிரத்திலொன்றும் கடலிற்குளப்படியும்போலே புறம்பில்லாதவையெல்லாமிதிலேயுண்டாய் இதிலில்லாததொன்றும் புறம்பின்றியேயிருக்கும் பரவ்யூஹவிபவங்களை ப்ரதிபாதிக்கையன்றியே அர்ச்சாவதாரரூபேண வந்தவதரித்து, *திருவரங்கப்பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளுங் கருமணியைக் கோமளத்தைக் கண்ணாரக்கண்டு, *மணத்தூணேபற்றி நின்று வாயாரவாழ்த்துகிற ப்ரபந்தமாகையாலே எல்லா ப்ரபந்தங்களிலும் இப்ப்ரபந்தம்

(க) ஸங்க்ஷேபே. (உ) பார- (ங) தி-வாய்-க-ங-கக.
(ச) தி-வாய்-அ-க-கக. (ரு) தி-வாய்-க-ரு-ங. (சு)

ப்ராபகரும் ருசிஜநகரும் விரோதிநிவர்த்தகருமெல்லாம் பெரிய பெருமாளே யென்றிருக்கிறார்.

பலபோக்த்ருத்வம் தம்மதாயிருக்க, "எல்லாமவரே" என்கிற படி யெங்ஙனேயென்னில்; ப்ரதமஸுக்ருதமும் தானாய், பேற்றுக்கு வேண்டுவன நிர்வஹித்துப்போந்த ஸௌஹார்த்தமும அத்தலையிலே கிடக்கையாலே, பேற்றுக்கு இத்தலையிலுள்ளது சொல்லப் பாத்தம் போராதிறே; உள்ளதுண்டாகில் அநுக்ரஹத்துக்கு ஹேதுவாமித்தனை. இதரவிஷயங்களில் அருசியும் பகவத்விஷயத்தில அப்ரதிஷேதமும் விளைந்த இம்மாத்ரத்திலே பெரியபெருமாள் தம்முடைய ஸ்வரூப ரூபகுணவிபூதிகளைக் காட்டக்கண்டநுபவித்து ப்ரீதராகிறார். (க) "ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட - ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட" என்று—மஹாராஜரையிட்டு ஸ்ரீ விபீஷணாழ்வானை அருள்பாடிட்டாப்போலே, * தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து *கடைத்தலையிருந்துவாழும் சோம்பராயிருக்கிற லோகஸாரங்க மஹாமுநிகளை அருள்பாடிட்டு, "நம் பாடுவானை யழைத்துக்கொண்டு

---

விலக்ஷணம். இவர், தமக்கு ப்ராப்யரும் ப்ராபகரும் ருசிஜநகரும் விரோதிநிவர்த்தகரும் எல்லாம் பெரியபெருமாளே யென்கிறார். பலபோக்த்ருத்வம் தம்மதாயிருக்க, "எல்லாமவரே" என்கிறபடி யெங்ஙனேயென்னில்,—ப்ரதம ஸுக்ருதமும்தானாய் இப்பேற்றுக்கு வேண்டுவன நிர்வஹித்துப்போந்த ஸௌஹார்த்தமும் அத்தலையிலே கிடக்கையாலே பேற்றுக்கு இத்தலையிலுள்ளது சொல்லப் பாத்தம் போராதிறே. உள்ளதுண்டாகில் அவனநுக்ரஹத்தாலே யாமித்தனை.

இதரவிஷயங்களில் அருசியும் பகவத்விஷயத்தில் அப்ரதிஷேதமும் விளைந்த மாத்ரத்திலே பெரியபெருமாள்தம்முடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளைக் காட்டக்கண்டநுபவித்து ப்ரீதராகிறார். (க) "ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட-ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட" என்று-மஹாராஜரையிட்டு ஸ்ரீ விபீஷணாழ்வானை யருள்பாடிட்டாப்போலே, * தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்ந்து *கடைத்தலையிருந்து வாழும் சோம்பரான லோகஸாரங்க மஹாமுநிகளை யருள்பாடிட்டு, "நம் பாடுவானை யழைத்துக்கொண்டுவாரும்" என்ன; அவரும் "அருள்

(க) ரா-ஸு-

காணும்கோயிலுக்குவந்தது” என்று பட்டரருளிச்செய்யும்படி. அனறியே, கோயில் போக்யதை தமக்கு நிலமல்லாமையாலே திருமலையிலேபோய் தரிக்கப்பார்க்கிறாரென்றுமாம். (விரையார்) நித்ய ஸூரிகளை யுடையனுவதுக்குமேலே ஓரைஸ்வர்யம்.

(விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்) ஆற்றிலே -யழுந்துவார் ஆழங்காலிலே யிளைப்பாறத் தேடுமாபோலே அவர்களும் வந்து அடிமைசெய்யுமிடம். (வேங்கடவன்) அர்ச்சாவதாரத்துக்குப் பொற்கால் பொலியவிட்டவிடம். (நிமலன்) இத்தலையில் அர்த்தித்வமும்கூட வின்றிக்கேயிருக்க, இப்படி உபகரிக்கையால் வந்தவௌஜ்ஜ்வல்யம். இவனும் ஓரடியிடப்பார்த்திராதொழிகை. † (அசித்வயாவ்ர்த்தியாலே) ஓரடியிட்டாருண்டாகில் (க)“[illegible] பத்ப்யாமபிகமாச்சைவ

மலையிலே தங்கிக்காணவந்தது” என்றருளிச்செய்தார். நித்ய ஸூரிகளை யுடையனுதுக்கு மேலே ஓரைஸ்வர்யம்.

(விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்) ஆற்றிலே அழுந்துவார் ஆழங்காலிலே யிளைப்பாறத் தேடுமாபோலே அவர்களும் வந்தடிமை செய்யுமிடம். (வேங்கடவன்.) அர்ச்சாவதாரத்துக்குப் பொற்கால்பொலிய விட்டவிடம்.

(நிமலன்) நிர்ஹேதுகமாக விஷயீகரித்த ஸௌசீல்யத்தையுடையவன். (நிமலன்) தன்பேறாக விஷயீகரித்த ஸௌசீல்யத்தையுடையவன். இத்தலையைப் பெறுகைக்குப் பச்சையிட்டானும் தானே. இத்தலையில் அர்த்தித்வமின்றிக்கேயிருக்க இப்படி உபகரிக்கையால் வந்த ஔஜ்ஜ்வல்யம். இவனும் ஓரடியிடப் பார்த்திராதொழிகை. ஓரடியிட்டாருண்டாகில் (க)“[illegible] பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்நேஹஸந்தர்சநேந ச.” ஆபிமுக்யமடியாக அங்கீகரித்து ஓரஞ்ஜலிமாத்ரமுங்கூட வுண்டாறுக்க

“விண்ணவர் கோன்” என்கையாலே, ஸௌலப்யத்வத்தினெல்லையென்கை. ஆழங்கால்வ்யங்க்யம், ஸீலகுணமிகுதியாலே ஆழங்காலென்கிறது.

இவனுடைய அத்வேஷாதிகளும் பொறுக்க மாட்டானென்னுமத்தை அருளுகிறார் (பத்ப்யாமித்யாதி).

† குன்டலிதமதிகம் (க) ரா-அ-ருO-௫O.

ஸ்நேஹஸந்தர்ஸநேநச" (நின்மலன்) இத்தலைக்கு உபகரித்தானு யிருக்கையன்றிக்கே தன்பேறாயிருக்கை. "அமலன்" என்று-தனக் காக்கினபடி; "விமலன்" என்று-தன்னடியார்க் காக்கினபடி; "நிமலன்" என்று-நான் பச்சையிடாதிருக்க என்கார்யம் செய்தா னென்கிறார். (நின்மலன்) இதுதன்பேறாகச் செய்தானென்கிறார், (க) "க்ருதக்ருத்யஸ்ததாராமஃ - க்ருதக்ருத்யஸ்ததாராமஃ" என்கிற படியே.

(நீதிவானவன்) ஶேஷஶேஷித்வங்கள் முறைமாறாத நித்யவிபூதியிலே யுள்ளவன். "ஈஶ்வரோஹம்" என்று எதிரிட்டிருக்குமிட மிறே யிவ்விடம். அங்குக்கலக்குவாருமில்லை, கலங்குவாருமில்லை; இங்குக்கலக்குவாருமுண்டு, கலங்குவாருமுண்டு. (நீண்மதிளரங்கத் தம்மான்.) *நீதிவானவன் என்று, * நீண்மதிளரங்கத் தம்மானென்

மாட்டாதானொருவன். (நிமலன்) இத்தலைக்கு உபகரித்தானு யிருக்கையன்றிக்கே தன்பேறு யிருக்கை. "அமலன்" என்றது-இவரைத் தனக்காக்கினபடி; விமலனென்றது-தன்னடியார்க்காக்கினபடி. "நிமலன்" என்றது-நான் பச்சையிடாதிருக்க என் காரியஞ் செய்தானென்கை. (நிமலன்) இது தன்பேறாகச்செய்தானென்கிறார். (க) "க்ருதக்ருத்யஸ்ததாராமஃ-க்ருதக்ருத்யஸ்ததாராமஃ" என்கிறபடியே. (நின்மலன்) தான்உபகரித்தானாய், இத்தலை, (உ) "உதவிக்கைம்மாறென்னுயிர்" என்றாப்போலே ப்ரத்யுபகாரந்தேடித் தடுமாறாதபடி, "ப்ரணஷ்டஸ்ய யதாலாபஃ-ப்ரணஷ்டஸ்ய யதாலாபஃ" என்கிறபடியே-உடையவன் உடைமையைப்பெற்றானாகில் நமக்கென்னென்று, ஆத்மலாபம் தன்னதாம்படியிருக்கிற ஶக்தியையுடையவன்.

(நீதிவானவன்) இப்படிப் புகுரநிறுத்துகைக்கடி ஶேஷஶேஷித்வங்கள் முறைகெடாமல் நடக்கும் நித்யவிபூதி வாஸனென்கை "ஈஶ்வரோஹம்" என்று - எதிரிட்டிருக்கு மிடமிறே இவ்விடம். அங்குக் கலக்குவாருமில்லை; கலங்குவாருமில்லை; இங்குக்கலக்குவாருமுண்டு; கலங்குவாருமுண்டு. (நீண்மதிளரங்கத்தம்மான்) "நீதி

கலக்குகிறது - ப்ரக்ருதி. கலங்குகிறான்—பத்தா (ஜீவா) த்மா.

(க) ரா-பா-க-அரு. (உ) தி-வாய்-எ-கூ-க0.

கிறார்; (க) "அளப்பரியவாரமுதை யரங்கமேயவந்தணனை" என்னுமா போலே. (நீண்மதிள்) ரக்ஷகத்வத்துக்குப் போரும்படியான மதிளையுடையபெரியகோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பரமசேஷி. (அம்மான்) ஈரரசு தவிர்த்தாலிறே சேஷித்வம் பூர்ணமாவது. திருமலையில் போக்யதை நிலமல்லாமையாலே மீளவும் கோயிலிலே புகுகிறார். வெள்ளத்தைக் கள்ளமடையாலே பள்ளத்தே விடுமாபோலே, திருவேங்கடமுடையான் வடக்குத்திருவாசலாலே வந்துபுகுந்தானத்தனை யென்றுமாம். (திருக்கமலபாதம்) செவ்வியும்குளிர்த்தியும் விகாஸமும் பரிமளமும் தொடக்கமானவை.

ஆதித்யனைக்கண்டாலிறே தாமரையலருவது, இத்தாமரைக்கு ஆதித்யன் இவர். பிராட்டி திருமுலைத்தடங்களிலும் திருக்கண்களி

---

வானவன்" என்று, "நீண்மதிளரங்கத்தம்மான்" என்கிறார். (க) "அளப்பரிய வாரமுதை யரங்கமேயவந்தணனை" என்னுமா போலே. (நீண்மதிளரங்கம்) ரக்ஷகமாகப்போரும்படியான மதிளையுடைய பெரியகோயிலிலே கண்வளர்ந்தருளுகிற சேஷி. இப்பாசுரம்கேட்டுப்போலேகாணும் திருமங்கையாழ்வார் திருமதிள்செய்தது; அழகிய வாயாலே இதருளிச் செய்தபின்பாகாதே திருமாளிகைகளும் திருக்கோபுரங்களும் கனத்தது. (அம்மான்) அங்குள்ளாரோடொத்த ப்ராப்தி இங்குள்ளாரோடுண்டாகையாலேயிறே இங்குவந்து சாய்ந்தருளிற்று. (அம்மான்) ஈரரசு தவிர்ந்தாலிறே சேஷித்வம் பூர்ணமாவது. திருமலையில் போவது நிலமல்லாமே மீளவும் கோயிலிலே புகுகிறார். வெள்ளத்தைக் கள்ளமடையாலே பள்ளத்தே விடுவாரைப்போலே, திருவேங்கட முடையான் வடக்குத் திருவாசலாலே வந்து புகுந்தானத்தனை யென்றுமாம்.

(திருக்கமலபாதம்) பெருக்காற்றிலே யிழிவார் தெப்பங்கொண்டு இழியுமாபோலே ஒரு தாமரைப்பூவை த்ருஷ்டாந்தமாக்குகிறார் — செவ்வி குளிர்த்தி நாற்றம் விகாஸம் இவை தாமரைப்பூப் போலே யிருக்கையாலே. ஆதித்ய ஸந்நிதியிலே அலரும் தாமரை போலே ஆஸ்ரிதஸந்நிதியிலே அலருந்தாமரையாய்த்துத் திருவடி

---

(திரு) பூஜ்ய வாசியாதல், பிராட்டிகாதல்.

(க) திருநெ-கஎ. † போகயதை.

னும் ஒற்றிக்கொள்ளும் திருவடிகள். இவருடைய * தளிர்புரையும் திருவடிகளிருக்கிறபடி. (அம்மான் திருக்கமலபாதம்) தொடர்ந்து வருகைக்குப்ராப்தி. (வந்து) த்வீபாந்தரத்தில் சரக்குச்சேரவேண்டினால் பாதிப்பாதி வழியாகிலும் வருதல், ஒருதலைப்பற்றுதல் செய்யவேணுமிறே; அங்ஙனன்றியே, (க) "வந்துனதடியேன் மனம்புகுந்தாய்" என்கிறபடியே—வழிவந்தானும் தானே, பற்றினானும்தானேயென்கிறது. (என்கண்ணினுள்ளன) † (நீதிவானவன்-கமலபாதம் - என்கண்ணினுள்ளன) ஸதாதர்ஶநம் பண்ணுகிறவர்கள் கண்ணுக்கிலக்கானதுகிடீர்! என்கண்ணுக்கிலக்காகிறது. வல்லதனைநாளும் விரோதம் பண்ணினேன்; போக்கற்றவாறே என்கண்ணைச் செம்ப

கள். பிராட்டி திருமுலைத்தடத்திலும் திருக்கண்களிலும் ஒற்றிக்கொள்ளும் திருவடிகள். இவருடைய * தளிர்புரையுந் திருவடி யிருக்கிறபடி.| "அம்மான் திருக்கமலபாதம்" என்கையாலே—ப்ராப்தமுமாய் ப்ராப்யமுமான திருவடிகளென்கை. "நாராயண ச(வ)ரணங்கள்" என்றபடி.

"வந்து" என்று அதினுடைய உபாய பூர்த்திசொல்லுகிறது (வந்து.) (உ) * [illegible] விதிஶிவஸநகாத்யைர்த்யாது மத்யந்ததூர மானதிருவடிகள்கிடீர்! என்னளவும் வந்து விஷயீகரித்தது. த்வீபாந்தரத்தில் சரக்குச்சேர வேண்டினால் பாதிப்பாதி வழியாகிலும் வருதல், ஒருதலைப்பற்றுதல் செய்யவேணுமிறே; அங்ஙனன்றியே, (க) "வந்துனதடியேன் மனம்புகுந்தாய்" என்கிறபடியே — வழிவந்தானுந்தானே, பற்றினானுந்தானே யென்கிறது. (என் கண்ணினுள்ளன.) எத்தைக்கண்ட கண்களுக்கு இவை விஷயமாகிறன. (நீதி வானவன் - கமலபாதம் என்கண்ணினுள்ளன) ஸதாதர்ஶநம் பண்ணுகிறவர்களுடைய கண்ணுக்கிலக்கானதுகிடீர் என்கண்ணுக் கிலக்காய்த்து. வல்லதனைநாளும் விரோதம் பண்ணினேன், போக்கற்றவாறே கண்ணைச் செம்பளித்துக் கண்ணையிறுத்து, உள்ளேபுகுந்து

"விண்ணவர்கோன்" என்று த்வீபாந்தரவஸ்து. கண்ணுக்கு விஷயமென்னுமல், உள்ளனவென்பானேன்னென்ன வருளிச்செய்கிறார் (வல்லதனைநாளுமித்யாதி).

(க) தி-மொ-ஙு-ரு-க. (உ) ஸ்தோ-ர-சஎ. † ஒருவாக்யம் நழுவிற்று.

ளித்தேன், தொடர்ந்து வந்து செம்பளித்த கண்ணையுறுத்து, உள்ளேபுகுந்து நிற்கையாலே "என்கண்ணினுள்ளன" என்கிறார். அன்றியே தம்கண்ணாலே பார்க்கை அவத்யமென்று கண்ணைச் செம்பளித்தார், கண்ணினுள்ளே ப்ரகாசிக்கத் தொடங்கிற்று.

(ஒக்கின்ற) ப்ரயோஜநம் இரண்டுதலைக்கு மொத்திராநின்றது; அங்குத்தைக்கு ஶீலஸித்தி; இங்குத்தைக்கு ஸ்வரூபஸித்தி. (ஒக்கின்ற) ப்ரத்யக்ஷஸமாநாகாரமாயிருந்ததென்னுதல்; என்கண்ணுக்கிலக்கானவிடத்திலும் பழையநிலை குலையாதிருந்ததென்னுதல். ஸம்ஸாரிகளைப்பார்த்து உங்களுக்குமொக்குமோவென்கிறாராதல், இந்த லாபம் அத்தலைக்கு மொக்குமோ வென்கிறாராதல்.

---

நிற்கையாலே என்கண்ணினுள்ளன. அன்றியே, தம்கண்ணாலே பார்க்கை அவத்யமென்று கண்களைச் செம்பளித்தார். கண்ணினுள்ளே ப்ரகாஶிக்கத் தொடங்கிற்று. (ஒக்கின்ற) ப்ரயோஜநம் இரண்டுக்கு மொத்திராநின்றது. அங்குத்தைக்கு ஶீலஸித்தி; இவ்குத்தைக்கு ஸ்வரூபஸித்தி.

(ஒக்கின்ற) என் கண்ணுக்கிலக்கான வுங்களுக்கு மொக்குமென்கிறாராதல். "கண்ணினுள்ளன வொக்கின்றவே" என்று-ஒரு பதமாய்-என் கண்ணினுள்ளன வாறுப்போலே யிராநின்றதே யென்றபடி. ஒன்பதுபாட்டு வழியிலேயநுஸந்தித்து, பத்தாம்பாட்டிலே திருவடித்தொழுதாரென்கிற ஐதிஹ்யத்தின்படியே மாநஸஸாக்ஷாத்காரந் தான் கண்ணிட்டுக் கண்டாப்போலே யிருக்கை. அங்ஙனன்றிக்கே மாநஸஸாக்ஷாத்காரத்தோடு சேர்ந்திருந்தது சக்ஷுர்விஷயமான திருவடிகளென்றுமாம்.

(அமலன்) * உயர்வற வுயர்நலமுடையவன்; (ஆதி) * யவன்; (பிரான்) * மயர்வற மதிநல மருளினன்; (அடியார்) - * பயிலுஞ்சுடரொளி; (விண்ணவர்கோன்) * அயர்வறு மமரர்களதிபதி; (வந்து) அவர் "தொழுதெழு" என்றார்; இவர்க்கு அவைதானே வந்தன. (க)

"ஒக்கின்ற" என்கையாலே-நிலைகுலையாதிருக்கை, (க)

மூ.—உவந்த வுள்ளத்தனா யுலகமளந்தண்டமுற
நிவர்ந்த நீண்முடியனன்று நேர்ந்த நிசாசரரைக் [னரைக்
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன் கடியார்பொழிலரங்கத் தம்மா
சிவந்தவாடையின்மேற் சென்றதாமென சிந்தனையே. (௨)

---

ப-ரை.—உவந்த உள்ளத்தனாய்—(என்னை யகப்படுத்துகை யாலே) ஸந்துஷ்ட சித்தனாய்க்கொண்டு; உலகம் அளந்து—மூன்று லோகத்தையுமளந்து, அண்டம்உற—அண்டகடாஹத்திலே செல்லும்படி, நிவர்ந்த-உயர்ந்தவனாய், நீள்முடியன்-ஆதி ராஜ்ய ஸூசகமான திருவபிஷேகத்தை யுடையனாய், அன்று—ஜநஸ்தாநத்திலே யிருக்கிறவன்று, நேர்ந்த - எதிர்ந்த, நிசாசரரை—கரதூஷணாதி ராக்ஷஸருடைய ப்ராணன்களை, கவர்ந்த - க்ரஸித்த, வெம்—க்ரூரமான, கணை—திருச்சரங்களை யுடையனாய், காகுத்தன்—ககுத்ஸ்த குலோத்பவனாய், கடி ஆர்—பரிமளம்மிக்க, பொழில்—சோலையாலே சூழப்பட்ட, அரங்கத்து—கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனை, அம்மான்—ஸர்வஸ்வாமி யானவனுடைய, அரை - திருவரையில் சாத்திய, சிவந்த ஆடையின்மேல் - திருப்பீதாம்பரத்தின் மேலே, என் சிந்தனை - * சதிரிளமடவாருடைகளிலே ஆழக்கடவ என் நினைவானது; சென்றது ஆம்—சென்றதே! என்று ஆஸ்சர்யப்படுகிறார். (௨)

---

(அமலன்) – * உயர்வறவுயர் நலமுடையவன், (ஆதி) *யவன், (பிரான்) *மயர்வற மதிநல மருளினன். (அடியார்க்கு) *பயிலுஞ்சுடரொளி, (விண்ணவர்கோன்) *அயர்வறுமமரர்களதிபதி. (வந்து) அவர் *"தொழுதெழு" என்றார், இவர்க்குஅவை தானேவந்துநின்றன. (௧)

அ.—இரண்டாம்பாட்டு. முதற்பாட்டில்—அவன் தொடர்ந்து வந்தபடி சொன்னார், இப்பாட்டில் - தாம் மேல்விழுந்தபடி சொல்லுகிறார்.

---

அ.—இரண்டாம்பாட்டு (உவந்த) கீழ்ப்பாட்டிலே - "அரங்கத்தம்மான் திருக்கமல பாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்றவே" என்று - திருவடிகள் தானே தம்மை விஷயீகரித்துத் தந்திருவுள்ளத்திலே ப்ரகாஶித்தபடியைச் சொன்னார்; இப்பாட்டில்.

திருவடிகளிலே தொடர்ந்த திருவுள்ளம் திருப்பரியட்டத்தின் மேல் சேர்ந்தபடி யெங்ஙனேயென்னில்; தானறிந்து சேரில் விஷயத்தின்போக்யதைக்குக் குற்றமாம், ஆகையாலே போக்யதை யளவு பட்டது மல்ல, ஆசை தலைமடிந்ததுமல்ல, கடலோதம் கிளர்ந்தலைக் கப்புக்கால் உள்ளே கிடந்ததொரு துரும்பு கடலை அளவிட்டல்ல வேகரையேறுவது, ஒருதிரையொருதிரையிலே ஏறவீசுமத்தனையிறே.

---

“வந்துனதடியேன் மனம்புகுந்தாய் புகுந்ததற்பின்வணங்கும் என் சிந்தனைக் கினியாய்” என்கிறபடியேஅவன் விஷயீகரித்துப் புகுந்த பின்பு, திருவடிகளளவன்றியே அத்தோடு சேர்ந்த திருப்பீதாம் பரத்தளவுஞ் செல்லத்தம்சிந்தை நசைபண்ணுகிறபடியைச் சொல்லுகிறார். ஈன்றணித்தானநாகு,தன்கன்றுக்குவாஸநையில்லாமை யாலே முதலில் தானே தன்முலையை அதின்வாயிலே கொடுக்கும்; பின்பு சுவடறிந்தால் கன்றுதானே இதுகாற்கடைக் கொள்ளிலும் மேல்விழுமிறே. அப்படியே திருவடிகள் தானேவந்து போகய (ஹோம்ய) மானபடி சொன்னார்.முதற்பாட்டில்; இதில்-தம்முடைய நெஞ்சுசுவடறிந்து மேல்விழுந்தபடி சொல்லுகிறார். திருவடிகளிலே கிடந்த திருவுள்ளம் திருப்பரியட்டத்தின்மேலே சேர்ந்தபடி யெங்ஙனே யென்னில்; தானறிந்து சேரில் விஷயத்தின் போக்யதைக் குக்குற்றமாம்; ஆகையால் போக்யதை யளவுபட்டதுமல்ல, ஆசை தலை மடிந்ததுமல்ல, கடலோதங் கிளர்ந்தலைக்கப்புக்கால் உள்ளே கிடந்ததொரு துரும்பு கடலை யளவிட்டல்லவே கரையிலே யேறு வது; ஒருதிரையிலே ஒரு திரையேற வீசுமத்தனையிறே.

கீழ்ப்பாட்டில்-“விமலன் விண்மலன்” என்று அபேக்ஷாநிரபேக்ஷமாகவும் ஸ்வயம் ப்ரயோஜநமாகவும் தன் திருவடிகளை யுபகரித்தானென்றிறே இவர் சொல்லிற்று. (க) “ரக்ஷ்யாபெக்ஷாம் ப்ரதீக்ஷதே - ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே” என்கிறபடியே ரக்ஷ்யத்தினுடைய அபேக்ஷையைப் பார்த்திருப்பானொருவனன்றோ; ஆகையால் இது உபபந்நமென்றுதோற்றி யிருந்ததில்லையீ! என்ன; இந்த லோகமாக மஹாபலியபி (ஸி) மாநத்திலேபுக்கு அர்யமோஷ

---

அரு.—இரண்டாமபாட்டு. (உவந்தவித்யாதி), (தானறிந்துசேரில்) திருவரையில் போக்யதையையறிந்து கிட்டிலென்றபடி. (விஷயத்தின் போக்யத்தை) திருவடிகளில் போக்யதை.

---

(க) லக்ஷ்மீத-கள-எஅ.

வ்யா. (உவந்தவுள்ளத்தனாய்.) ஆழ்வாரை அகப்படுத்துகையால் வந்தப்ரீதி. ஸர்வேஶ்வரனாய்ஶ்ரியঃபதியாய் அவாப்தஸமஸ்தகாமனாயிருக்கிறவன் அர்த்தியாய் வந்து, தன் திருவடிகளைத் தலையிலே வையாநின்றால் (க) "ஶீர்ஷம் ... மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி" என்று உகக்கவேண்டியிருக்க, அவையறியாதொழிய ப்ரஜை பால்குடிக்கக்கண்டு உகக்கும் மாதாவைப்போலே உகந்த திருவுள்ளத்தை யுடையவனாய்,

மாயக்கிடக்க, இவர்களுடைய அர்த்தித்வநிரபேக்ஷமாக இவர்கள் தலையிலே தன் திருவடிகளைவைத்து இதுதானே ப்ரயோஜநமாகவுகந்து போருமாகாரம் அவனுக்கு அடியே பிடித்து உள்ளதொன்றன்றோ, இன்று புதிதாக வருகிறதொன்றோ வென்கிறார்.

வ்யா; (உவந்தவுள்ளத்தனாய்,) ஆழ்வாரை அகப்படுத்துகையால் வந்த ப்ரீதி. ஸர்வேஶ்வரனாய் ஶ்ரியঃபதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய், (உ) "அவாப்தகாம: - அவாக்ய நாதர:" என்கிறபடியே பரிபூர்ணனான தான் (க) "கதா ... த்வஜாரவிந்தாங்குஶ வஜ்ரலாஞ்சநம் । த்ரிவிக்ரம த்வச்சரணம் புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி" என்றும், (ங) "படிக்களவாக நிமிர்த்த நின்பாத பங்கயமே தலைக்கணியாய்" என்றும் - சிலர் அபேக்ஷியாதிருக்க, (ச) "... - பாதாருந்துதமேவ பங்கஜரஜ:" என்னும் ஸௌகுமார்யத்தை யுடைத்தாய், பெரிய பிராட்டியார் திருக்கைகளால் வருடவும் பொறாத அந்தத் திருவடிகளைக் காடுமேடுகளென்று பாராதே சேதநாசேதந விபாக(ஸாம)ம்பாராதே பரப்பினால், "இப்படி யுபகரிப்பதே!" என்று இவர்கள் உகக்க ப்ராப்தமாயிருக்க, இவர்களறிவுகேடே ஹேதுவாக விலக்காதொழியப் பெற்றோமே யென்றிட்டிக்கப் புகுந்த திருவுள்ளத்தை யுடையனாய்.

(ரு) "க்ருதக்ருத்யா ... விஜ்வர: ப்ரமுமோத ஹ" - க்ருதக்ருத்யஸ்ததாராமோ விஜ்வர:ப்ரமுமோதஹ" என்று - தம்

---

உகப்பு-ஆழ்வார் விஷயமாதல். லோகவிஷயமாதல்.

அரு—இரண்டாம்பாட்டு (உவந்தவித்யாதி), (தானறிந்துசேரில்) திருவரையின் போக்யதையையறிந்து கிட்டிலென்றபடி. (விஷயத்தின் போக்யதை) திருவடிகளில் போக்யதை.

உகப்பு ஆழ்வார் விஷயாதல். லோகவிஷயமாதல்.

---

(க) ஸ்தோ-ா-௩௪. (உ) சாந்தோ-௩-௧௪-உ. (௩) தி-வாய்-௬-௨-௯.
(ச) ஸ்ரீகுணா-௪௧. (ரு) ரா-பா-௬-அரு.

இவற்றைப் பிரிந்தால் வ்யஸநமும் தன்னதேயிறே; (க) "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி துக்கித:" என்கிறபடியே. (உலகமளந்து) வருத்த திருவடிகள் தலையிலே வந்திருந்தாலும் உகக்கவறியாத லோகத்தைக் கிடீர்! தானும்விடாதே யளந்தது. உகக்கவறியாமைக்கு * வன்மையையிறே குணகுண நிரூபணம்பண்ணாதே எல்லார் தலையிலும் ஒக்கத் திருவடிகளை வைத்தபடியாலே, பக்திமான்களும் பாதகிகளும் ஒக்க வாழ்ந்து போய்த்து.

(அண்டமுற நிவர்ந்த நீண்முடியன்.) அண்டகடாஹத்திலே சென்று சேர்ந்த திருவபிஷேகத்தை யுடையவன். அண்டகடா

---

மோடும் தம்பியாரோடு முண்டான வாஸனையாலே முடியை விலக்கிருமென்று வெறுத்திருந்த பெருமாள், இவன் இசைந்து முடியை வைத்த பின்பு உகந்தாப்போலே, இத்தலையில் அத்வேஷமே ஹேதுவாகத் திருவடிகளை வைக்கப்பெறுகையாலே மிகவும் ப்ரீதனாய், எதிர்த்தலை யறியாதிருக்கத் தானேயுகக்கிறது வாத்ஸல்யமிறே; உறங்குகிற ப்ரஜையைத் தாய்கட்டிக்கொண்டு கிடக்கிறது வாத்ஸல்யமன்றோ. இவற்றைப் பிரிந்தால் வ்யஸநமும் தன்னதேயிறே (க) "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்."

(உலகமளந்து) "வஸிஷ்ட சண்டாள விபாக(ஸாம)ம் ஸ்த்ரீ பும்விபாகம், ஜ்ஞாநாஜ்ஞாந விபாகம்" என்றவற்றைப் பாராதே, எல்லார் தலையிலுமொக்கத் திருவடிகளை வைத்தபடி. (உலகமளந்து) வைத்த திருவடிகள் தலையிலேவந்திருந்தாலும் உகக்கவறியாத லோகத்தைக் கிடீர்! தான்விடாதே யளந்தது; உகக்கவறியாமைக்கு * வன்மையையிறே. குணகுண நிரூபணம் பண்ணாதே எல்லார் தலையிலுமொக்கத் திருவடிகளை வைத்தபடியாலே, பக்திமான்களும் பாதகருமொக்க வாழ்ந்துபோய்த்து. (அண்டமுற நிவர்ந்த நீண்முடியன்.) அண்ட கடாஹத்திலே சென்று சேர்ந்த திருவபிஷேகத்தையுடையவன். அண்டகடாஹம் வெடித்து அடிபிடிக்க

---

உகக்க வறியாவிட்டால் வைப்பானேனென்ன வருளிசெய்கிறார் (குணகுணேத்யாதி).

---

(க) ரா-அ-உ-சக.

ஹம் வெடித்து அடைகட்டவேண்டும்படியிறே அபேக்ஷிதம்பெற்று வளர்ந்தபடி. (அண்டமுற) (௧) "அண்டம் மோழையெழ".

(நிவர்ந்த) நிமிர்ந்த. பூவலர்ந்தாப்போலே. (நீண்முடியன்) உபய விபூதிக்கும் நிர்வாஹகனென்று தோற்றும்படி யிருக்கிற திருவபி ஷேகத்தை யுடையவன். ரக்ஷ்யவர்க்கத்தை நோக்கினவிறே ரக்ஷ

---

வேண்டும்படியிறே அபேக்ஷிதம்பெற்று வளர்ந்தபடி. (அண்டமுற) (௧) "அண்டம் மோழையெழ". "நிவர்ந்த" என்கிற ஶப்தம்-உயர் வென்றும் ஓங்கியென்றுங் காட்டும்; உற வென்கையாலே — ஓங்கி யென்றபடி.

(நிவர்ந்த) பூவலர்ந்தாப்போலே. (நீண்முடியன்) முடிக்கு நீட்சியாவது — உபயவிபூதிக்கும் தரித்த முடியென்று தோற்றும் படியாயிருக்கை. (௨) "ஆதிராஜ்யமதிகம் புவநாநாமீஶதேவி ஶம்ஸதி கிரீடஶிகை:-ஆதிராஜ்யமதிகம் புவநாநாமீஶதே பிஶம் ஸயந்கில மௌளி:" என்னுமாபோலே. ரக்ஷ்யவர்க்கத்தை நோக்கி விறே ரக்ஷகன்முடிநற்றரிப்பது. (௩) "ஒருகாலுங்காமருசீரவுணனுள் ளத் தெண்மதியுங்கடந்து" என்று - திருவடிகளுக்கு வளர்த்தி சொல்லப்ராப்தமாயிருக்கத் திருமுடிக்கு வளர்த்திசொல்லுகிறது- இத்திருவடிகள் அப்ராப்தமான திருவடிகளன்று, ப்ராப்தமான திருவடிகளென்று தோற்றுகைக்காக. தான் அர்த்தியாய்ச்சென்று அர்த்தித்வத்தை மாறாதே அவன் கொடுத்தபடியாலே உவந்த உள் ளத்தனாய். அவன்றானறிய வுகக்கவொண்ணாதே. (உலகமித்யாதி) திருக்கையில் நீர்விழுந்த வளவிலே அந்நீரே பற்றாசாகவளர்ந்து அளந்துகொண்டான்.

ஆக இப்படி அர்த்தித்வ நிரபேக்ஷமாக லோகத்தை இருந்த தேகுடியாகத் திருவடிகளாலே விஷயீகரித்தாப்போலே, உம்மு டைய நிகர்ஷம்பாராதே, (௪) "அரவிந்தப்பாவையுந்தானு மகம் படிவந்துபுகுந்து" என்று - நெஞ்சிலேவந்து புகுந்தானேயாகி

---

(அடைகட்ட) தமரிட. அளப்பதற்கு முன்பு நீண்முடியில்லையோ வென்ன வருளிச்செய்கிறார்—(ரக்ஷ்யவர்க்கத்தையித்யாதி).

---

(௧) தி-வாய்-எ-௪-௧. (௨) வர-ஸ்த-௨௫. (௩) திருநெ-௫.
(௪) பெரி-தி-௫-௨-௧0.

கன் முடிதரிப்பது. (அன்றித்யாதி) கண்ட காட்சியிலே "ஜிதம்" என்ன வேண்டும்படியிருக்குமவனிறே. எதிரிட்ட பையல்களை முடிக்கைக்கு வெவ்விய சரத்தையுடைய சக்ரவர்த்தித் திருமகன்.

---

னும், உம்முடைய சித்தமான தா ராகாதி தூஷிதமாயிருக்கையாலே, (க) "நாஸூஜீ—நாஸபதி" என்கிறபடியே அங்குக் கால்பொருந்தியிருக்கமாட்டானே; ஆகையால் அத்தை நீர்போக்கப்பாரீரென்ன; (அன்றுநேர்ந்த நிசாசரரைக்கவர்ந்த வெங்கணைக்காகுத்தன்) கண்ட காட்சியிலே (உ) "ஜிதமெ - ஜிதந்தே" என்ன வேண்டியிருக்கிறவனிறே. எதிர்த்த பையல்களை முடிக்கைக்கு வெவ்விய சரத்தையுடையவன்.

பெருமாளும், (௩) "ஸ்ரீயா ஸாயூ-ஸ்ரியா ஸார்த்தம்" என்கிறபடியே பிராட்டியும், நித்யஸூரிகளோபாதி * சுற்றமெல்லாமான இளையபெருமாளுமாக தண்டகாரண்யத்திலே போய்ப்புக்கு, பரதன் அங்கேவந்து பின்தொடருகையாலே அங்கிருக்கமாட்டாதே ஜநஸ்தாநத்திலேபோய்ப்புக்கு அங்கு வர்த்திக்கிறரிஷிகள் பாடே சென்று, (௪) "ஆவாஸம் ஹ்யஹம் இச்சாமி ப்ரதிஷ்டமிஹ காநநே - ஆவாஸந்த்வஹமிச்சாமிப்ரதிஷ்டமிஹகாநநே" என்று - உங்கள் ஸகாஸத்திலேயிருக்கப் பாராநின்றோமென்று இடம் தரவேணுமென்ன; அவர்களும் அங்கேயிருக்க அநுமதிபண்ண, ஸ்ரீநன்றாகப்பர்ணசாலையைச்சமைத்துவாஸ்துபலிகளுமிட்டு, அங்கே யெழுந்தருளியிருக்க, அவ்விருப்புக்கு விரோதிகளாய்வந்த கரதூஷணாதிகள் எதிர்க்க, அவர்களை நோக்கி அந்தரிஷிகள் கொடுத்த மேதாரம்புணடோ; அவர்கள், (௫) "ஸஹிஷ்ய ஸ்ரீராணி-ஏஷிபஸ்பசரீராணி" என்னும்படி உருமாய்த்த அநந்தராக்ஷஸரை, தம்முடைய திருக்கைத் திருச்சார்ங்கத்தாலே * உருக்கெட வாளிபொழிந்த சக்ரவர்த்தி திருமகன், என்னுடைய ராகாதிதோஷங்களை * விவேகசரஜாலத்தாலே ஸமிப்பித்து, * அரவத்தமளியினோடும் - அரவிந்தப்பாவையினோடும் * பேரேனென்றென்னெஞ்சு நிறையும்படி புகுந்திருக்கிறவனென்கிறார்.

---

(க) வி-தர்மம். (உ) ஜிதக-கக. (௩) ஸுமே.
(௪) ரா-ஆ ரு-௩௩. (௫) ரா-ஆ-௬-கக.

